THANZEEL ACADEMY
FOR ISLAMIC STUDIES

# குழந்தைகளுக்குரிய கடமைகள்

அகீகா

பெயர் சூட்டுதல்

முடியை நீக்குதல்



வஸீம் ஹுஸைன் ரியாதி B.A (Hons) (Riyadh),
Diploma in Arabic Language and Islamic Studies

# குழந்தைகளுக்குரிய கடமைகள்

## அகீகா

## பெயர் சூட்டுதல்

## முடியை நீக்குதல்

**வஸீம் ஹுஸைன் ரியாதி** B.A (Hons) (Riyadh),
Diploma in Arabic Language and Islamic Studies

வெளியீடு
தன்ஸீல் அகடமி

# நூல் விபரம்

பெயர் - குழந்தைகளுக்குரிய கடமைகள்

ஆசிரியர் - வஸீம் ஹுஸைன் ரியாதி (B.A Hons) Dip In Arabic

மொழி - தமிழ்

பக்கங்கள் - 38

பதிப்பு - 2022 செப்டம்பர்



வெளியீடு - தன்ஸில் அகடமி



# பொருளடக்கம்

## தன்ஸீல் அகடமி ஓர் அறிமுகம்

தன்ஸீல் அகடமியானது ஆன்லைன் மூலமாக மக்கள் தூய இஸ்லாத்தையும், அதோடு தொடர்பான அறிவுகளையும் பயில்வதற்காக ஆரம்பிக்கப்பட்ட கல்வி நிறுவனமாகும். இது தமிழ், சிங்களம், ஆங்கிலம் ஆகிய மொழிகளில் நடைபெறுகிறது. இலங்கை உட்பட வெளிநாடுகளில் இருந்தும் நூற்றுக்கும் மேற்பட்ட மாணவர்கள் இதில் கல்விபயில்கிறார்கள்.

### தன்ஸீல் அகடமியின் பிரிவுகள்

**அ. அல்குர்ஆன் கற்கைள் பிரிவு**

சிறுவர்களுக்கான அல்குர்ஆன் வாசிப்புப் பயிற்சி
பெரியோர்களுக்கான அல்குர்ஆன் வாசிப்புப் பயிற்சி
அல்குர்ஆன் திலாவத்
தஜ்வீத்
அல்குர்ஆன் மனனம்

**ஆ. இஸ்லாமிய கற்கைகள் பிரிவு**

அகீதா ஹதீஸ்
தஃப்ஸீர் ஃபிக்ஹ்
ஸீரா அரபு

**இ. தஃவாப் பிரிவு**

**ஈ. மொழிபெயர்ப்பு மற்றும் மொழியாக்கப் பிரிவு**

**உ. தொழிற்கல்வி கற்கைகள் பிரிவு**

இதில் தஃவாப் பிரிவு மூலம் நாம் இஸ்லாமிய வகுப்புகள், இஸ்லாமிய நூல் வெளியீடு, கட்டுரைகள், சமகால நிகழ்வுகள் தொடர்பான போஸ்டர்கள் போன்றவற்றை வெளியிட்டு வருகிறோம். அந்த வரிசையில் ‘‘குழந்தைகளுக்கான கடமைகள்’’ எனும் நூலையும் வெளியிடுவதில் பெருமிதம் கொள்கிறோம்.

நிறுவனர்
**ஜே. எம். ஹிஸ்புல்லாஹ் அன்வாரி**
thanzeeledu@gmail.com
0094766880897



# உள்ளே நுழைவதற்கு முன்னர்......

புகழ் அனைத்தும் அல்லாஹ்விற்கே! இருளை இல்லாமல் செய்யக்கூடிய, மேகத்தை ஓட்டக்கூடிய, காற்றை அனுப்பக் கூடியவனாகிய அல்லாஹ்விற்கே புகழ் அனைத்தும். அவனை நான் புகழ்கிறேன். அவனுக்கு நான் நன்றி செலுத்துகிறேன். உண்மையாக வணக்கத்திற்கு தகுதியானவன் அல்லாஹ்வை தவிர வேறு யாருமில்லை என நான் சாட்சி கூறுகிறேன். உண்மையான, வெற்றியளிக்கக்கூடிய சாட்சியாக சாட்சி கூறுகிறேன். நேர்வழியின் பாதைகளை தெளிவுபடுத்திய, அதனை காட்டித்தந்த எமது தலைவரும் இறுதி நபியுமாகிய முஹம்மத் (ஸல்) அவர்கள் அல்லாஹ்வின் தூதர் என நான் சாட்சி கூறுகிறேன். அவர்கள் மீதும் அவர்களது மனைவிமார்கள் மீதும் ஸஹாபாக்கள், தாபியீன்கள், கியாமத் நாள் வரை அவர்களை பின்தொடரக் கூடியவர்கள் அனைவர்கள் மீதும் ஸலவாத்தும் ஸலாமும் உண்டாவதாக!.

குழந்தைகள் என்பது அல்லாஹ் வழங்கியவைகளில் மிகவும் முக்கியத்துவம் வாய்ந்த அமானிதமாகும். அக்குழந்தைகளை வளர்ப்பதிலிருந்து மரணிக்கும் வரை அவர்களுக்கான கடமைகளை நிறைவேற்றுவது அவர்களை பராமரிப்பவர்களின் கடமையாக இருக்கிறது.

குழந்தைகளுக்கு அவர்களை பராமரிப்பவர்கள் செய்ய வேண்டிய முதற்கடமை அவர்கள் பிறக்கும் போதே ஆரம்பிக்கின்றது.

பிறந்த குழந்தைக்கு ஏற்படும், கெடுதிகள் நீங்க, மற்றும் குழந்தை கிடைத்தைமைக்காக அல்லாஹ்வுக்கு நன்றி செலுத்தும் பிரகாரம் அறுத்துப் பிலியிடுதல், குழந்தைக்கு பெயர் சூட்டுதல் என ஆரம்பிக்கின்றது. இப்படி குழந்தைகளின் நலன்களில் முக்கியத்துவப்படும் மேலுள்ள அம்சங்களை பெற்றோர்கள் நிறைவேற்றுவது கடமையாக உள்ளது. ஆனால் தற்காலத்தில் குழந்தைகள் பிறப்பதற்கு தயாராகும் தம்பதிகள் குழந்தை ஆணா? அல்லது பெண்ணா? என்பதை அறிந்த பின்னர் குழந்தை பிறப்பதற்கு முன்னரே அதற்குரிய தயார்படுத்தலில் இறங்கிவிடுகின்றனர். குழந்தைக்கு அது தேவை இது தேவை என அனைத்தையும் கொள்வனவு செய்கின்றனர். அதில் அதிக அக்கறையும் காட்டுகின்றனர். என்றாலும் அப்படி தயாராகும் பெற்றோர்கள் குழந்தைகளுக்கான அகீகா விடயத்தில் பொடுபோக்காக இருப்பதை அவதானிக்கிறோம்.

இந்தப் பொடு போக்கு தன்மை அகீகாவை நிறைவேற்ற அவர்களுக்கு சந்தர்ப்பங்களையும் சூழலையும் சரியாக அமைத்துக் கொடுப்பதில்லை என்பதே நிதர்சனமாகும். குழந்தை பிறந்த பின்னரே அகீகா பற்றி சிந்திக்கும் போக்கு அவர்களை தமது குழந்தைக்காக நிறைவேற்றும் நிலையை விட்டும் மாற்றுகின்றன.

காலம் கடந்த பின்னர் அதை நிறைவேற்றுவதில் உள்ள நடைமுறைச்சிக்கல்கள், மார்க்க அனுமதி, வீண் விமர்சனங்கள் என்ற வட்டத்தில் சிக்குண்ட பெற்றோர்களால் அவை தவிர்க்கப்படும் சந்தர்ப்பங்களும் ஏற்படுகின்றன.

எனவே அகீகா என்பது வலியுறுத்தப்பட்ட சுன்னத். அது நமது குழந்தைக்கான முதல் பணி என்பதை பெற்றோர்கள் உணர வேண்டும். அப்படியான உணர்வுக்கு குழந்தை கருத்ததருக்கின்ற போதே தயாராக வேண்டும். அப்போது தான் குழந்தை பிறந்து 07 நாட்களுக்குள் அதை நிறைவேற்றலாம்.

நபியவர்களை தொட்டும் அறிவிக்கப்படும் செய்தியில் ஒவ்வொரு குழந்தையும் அகீகாவை கொண்டு அடமானம் வைக்கப்பட்டுள்ளது. அதற்கு ஏழாம் நாளில் அகீகா கொடுக்கப்பட்டு, முடிகள் கழையப்பட்டு, பெயர் சூட்டப்படும் என இடம் பெற்றுள்ளது. (பார்க்க- திர்மிதி1522) எனவே இச் செய்தியில் பிறந்த குழந்தைகளுக்கு முடி களைவது, பெயர் சூட்டுவது எப்படி கடமையோ அதே போலவே அகீகாவும் இடம் பெற்றுள்ளதை அறிந்து கொள்ளலாம்.

எனவே அவற்றை பற்றிய அறிவும், தெளிவும் பெற்றோருக்கு இருப்பது அவசியமாகும். அவற்றை நிவர்த்தி செய்யும் நோக்குடன் இந்த நூலை நான் தொகுத்துள்ளேன். இதில் அகீகாவின் அவசியத்தை வலியுறுத்தும் செய்திகளை கூறியதோடு மாத்திரமல்லாமல், அது தொடர்பில் ஏற்படும் சில சந்தேகங்களுக்கும் தெளிவுகளை வழங்கியுள்ளோன். எல்லாம் வல்ல ரப்புல் ஆலமின் இம்முயற்சியை பொருந்திக் கொள்வானாக!

*வஸீம் ஹுஸைன் ரியாதி (B.A Hons)*

*Diploma In Arabic & Islamic Studies*

*2022/08/18*



# அகீகா ஓர் அறிமுகம்

அகீகா என்பது ஒரு பெற்றோர் தமது குழந்தைகளுக்காக முதல் முதலாக நிறைவேற்றும் வணக்கமாகும். அவை பற்றிய தெளிவுகளை நாம் அறிந்து கொள்வது அவசியமாகும்.

**மொழி ரீதியில்** - "அகீகா என்பது அரபு மொழிச் சொல்லாகும். இதற்கு பிளத்தல், நீக்குதல் என்று அர்த்தமாகும்.

**இஸ்லாமிய பரிபாஷையில்** - "அகீகா என்பது பிறந்த குழந்தைக்காக அல்லாஹ்விற்கு நன்றி கூறும் பொருட்டு அறுக்கப்படும் பிராணிக்கு கூறப்படும் பெயராகும்".

குழந்தைகளின் நற்பண்புகள் பூரணமடைய வேண்டும் என்ற நோக்கில் அகீகா கொடுக்கப்படுவதால் சிலர் அகீகாவை தமீமா என்ற பெயராலும் அழைப்பர்.




அகீகாவானது வாஜிபா? அல்லது சுன்னத்தா? என்கின்ற விடயத்தில் அறிஞர்கள் மத்தியில் பல கருத்துக்கள் நிலவுகின்றன.

இமாம்களான லய்த் இப்னு ஸஅத், ஹஸனுல் பஸரி, ழாஹிரியா மத்ஹப்பில் உள்ளவர்கள் அகீகா கொடுப்பது வாஜிப்பாகும் என்ற கருத்தில் உள்ளனர்.

அவ்வாறே பெரும்பாலான பிக்ஹ் கலை அறிஞர்களான மாலிகி, ஷாபிஈ, ஹன்பலி மத்ஹப்பில் உள்ள இமாம்கள் அதனை வலியுறுத்தப்பட்ட சுன்னத் என கூறுகின்றனர்.

இதில் இரண்டாவது கருத்தே சரியானதாகும். அதற்கு பின்வரும் செய்திகளை ஆதாரமாகக் கூறுகின்றனர்.

1. நபியவர்கள் கூறினார்கள் " யாருக்கு குழந்தை பிறந்து அந்தக் குழந்தைக்காக அறுத்துப்பலியிட (அகீகா கொடுக்க) நாடுகிறாரோ அவர் அறுத்துப்பலியிடட்டும். ஆண் குழந்தைக்கு சரிநிகரான இரு ஆடுகளும், பெண் குழந்தைக்கு ஒரு ஆடுமாகும்.[1]

1. (ஆதாரம் : அபூதாவூத் - 2842)

2. நபியவர்கள் கூறினார்கள் "ஒவ்வொரு குழந்தையும் அகீகாவை கொண்டு அடகுவைக்கப்பட்டுள்ளது. ஏழாம் நாளில் குழந்தைக்காக அகீகா கொடுக்கப்பட்டு, முடிகள் களையப்பட்டு, பெயரும் சூட்டப்படும்.[1]

3. நபி (ஸல்) அவர்களிடம் அகீகாவைப் பற்றி கேட்கப்பட்டது. அதற்கு அவர்கள் மாறுசெய்வதை நான் விரும்பமாட்டேன். யாருக்கேனும் குழந்தை பிறந்து அதற்காக அவர் (ஆட்டை) அறுத்து வணக்கம்புரிய விரும்பினால் அவர் ஒரே மாதிரியான இரண்டு ஆட்டை ஆண்குழந்தைக்கும் ஒரு ஆட்டை பெண்குழந்தைக்கும் கொடுக்கட்டும் என்று கூறினார்கள். [2]

4. அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள்ன் மற்றும் ஹுஸைன் (ஆகிய இருவருக்காக) அகீகா கொடுத்தார்கள். [3]

5. அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "பையன் (பிறந்த) உடன் 'அகீகா' (கொடுக்கப்படல்) உண்டு. ஆகவே, அவனுக்காக (ஆடு அறுத்து) 'குர்பானி' கொடுங்கள். அவன் (தலைமுடி களைந்து) பாரத்தை இறக்கிடுங்கள்" என்று சொல்ல நான் கேட்டிருக்கிறேன்.[4]

---

1. (ஆதாரம் : திர்மிதி - 1522, இப்னு மாஜா - 3165, இமாம் அல்பானி ரஹ் இச்செய்தியை ஸஹீஹ் எனக் கூறுகின்றனர்.

2. (ஆதாரம் : அஹ்மத் - 6530)

3. (ஆதாரம் : நஸயீ - 4142)

4. (ஆதாரம் : புஹாரி - 5472)

6. அஹ்மத் இப்னு ஹன்பல் (ரஹ்) அவர்கள் கூறினார்கள் "அகீகா கொடுப்பது நபியவர்களது வழிமுறையில் உள்ளதொன்றாகும். அவர்கள் ஹஸன், ஹுஸைன் ஆகிய இருவருக்கும் அகீகா கொடுத்துள்ளார்கள். ஸஹாபாக்களும் அதனை செயற்படுத்தி வந்தார்கள்."[1]

எனவே தான் தனது குழந்தைக்காக அகீகா கொடுப்பது வலியுறுத்தப்பட்ட ஓர் வணக்கமாகும் என்பதை பெற்றோர்கள் புரிந்து கொள்ள வேண்டும்.

1. அல் முஃனி - 9/459)



# அகீகா கொடுக்க வேண்டிய காலம்

குழந்தை பிறந்த ஏழாம் நாளில் அகீகா கொடுப்பது சுன்னத்தாகும். நபியவர்கள் கூறினார்கள் **"ஒவ்வொரு குழந்தையும் அதற்கான அகீகாவுடன் அடமானம் வைக்கப்பட்டுள்ளது. ஏழாம் நாள் குழந்தைக்காக அகீகா கொடுத்து முடிகளை களைந்து பெயர் சூட்டப்படும்".**[1]

**ஏழாம் நாள் என்பதை கணக்கிடுவது எப்படி?**

ஏழாம் நாள் என்பது குழந்தை பிறந்த தினமானது அடுத்த கிழமை அதே நாளிற்கு முந்திய தினமாகும். உதாரணமாக ஒருவருக்கு வியாழக்கிழமை குழந்தை பிறந்தால் அடுத்த கிழமை புதன் அன்று ஏழாம் நாளாகும். வெள்ளிக்கிழமை குழந்தை பிறந்தால் அடுத்த கிழமை வியாழன் அன்று ஏழாம் நாளாகும்.

அகீகாவை ஏழாம் நாள் கொடுக்க வேண்டும் இதுவே சுன்னா என்பதை மேலே உள்ள நபிமொழி குறிப்பிட்டுள்ளது. ஏழு நாட்களுக்கு பின்னர் கொடுக்கலாம் என்பது பற்றி ஆதாரமான எந்த செய்திகளும் இடம் பெறவில்லை.

ஆனாலும் அகீகா கொடுப்பவருக்கு தகுதியான காரணங்களால் வசதி வாய்ப்புக்கள் இல்லாமல் போகின்ற போது

1. (அபூதாவுத் - 2838, திர்மிதி - 1522)

அவர்கள் பிற்பட்ட காலங்களில் கொடுக்கலாம். அதற்கு பின்வரும் செய்திகளை அவதானிக்கின்ற போது அறியலாம்.

மைமூனி அவர்கள் கூறுகின்றார்கள். **"அஹ்மத் இமாம் அவர்களிடம் குழந்தைகளுக்கு அகீகா எப்போது கொடுக்க வேண்டும் என கேட்டேன். அதற்கு இமாம் அவர்கள் "ஆஇஷா ரழி அவர்கள் ஏழாம் நாள், (அல்லது) பதினாலாம் நாள், (அல்லது) இருபத்தியோராம் நாள் என கூறுவார்கள்" என்று பதிலளித்தார்கள்.**[1]

இமாம் திர்மிதி (ரஹ்) அவர்கள் கூறினார்கள் **"அறிஞர்களிடத்தில் ஏழாம் நாள் அகீகா கொடுப்பதும், அதற்கு சக்தி பெறவில்லை எனின் பதினாலாம் நாள் கொடுப்பது அதற்கும் சக்தி பெறாதவர்கள் இருபத்தியோராம் நாள் கொடுப்பது ஆகுமானதாக இருந்தது.**[2]

எனவே மேலுள்ள இரு செய்திகளும் ஒரு முக்கிய விடயத்தை குறிப்பிட்டுக் காட்டுகிறது. அதாவது பெற்றோர் ஏழாம் நாளில் கொடுப்பதற்கு உண்மையிலேயே சக்தி பெறாத போது தான் ஆஇஷா ரழி அவர்களின் கூற்றின் பிரகாரம் "ஒருவருக்கு ஏழாம் நாள் கொடுப்பதற்கு வழிகள் ஏற்படாத போது பதினாலாம் நாள் அல்லது இருபத்தியோராம் நாள் கொடுக்கலாம்.[3] சக்தியுள்ளவர் ஏழாம் நாளன்று கொடுப்பது தான் சுன்னாவாகும்.

1. துஹ்பதுல் மவ்தூத் - பக்கம் 62
2. ஸுனன் திர்மிதி - 153
3. முஸ்னத் இமாம் இஸ்ஹாக் ராஹவைஹி - 3/692 (1292)







# ஆண், பெண் குழந்தைகளுக்கு அகீகா கொடுக்கும் அளவு

> **"ஆண் குழந்தைக்கு இரண்டு ஆடுகளும், பெண் குழந்தைக்கு ஒரு ஆடும் அகீகா கொடுப்பது சுன்னாவாகும்."**

அகீகா என்பது அல்லாஹ்வின் அருள்களில் நன்றி செலுத்தும் அம்சங்களில் உள்ளதாகும். உண்மையிலேயே பெண் குழந்தை பெற்றோருக்கு அதிக உபகாரம் செய்பவளாகவும், குடும்ப உறவுகளோடு சேர்ந்து நடப்பதில் அதிமாக ஈடுபாடுடையவளாக இருந்தும் கூட அடிப்படையில் ஆண் குழந்தை என்பது பெண் குழந்தை என்பதை விட மகத்தான அருளாகும்.

நபியவர்கள் கூறினார்கள் **"ஆண் குழந்தைகளுக்கு சரிநிகரான இரண்டு ஆடுகளாகும். பெண் குழந்தைகளுக்கு ஒரு ஆடாகும்".**[1]

---

1. (அபூதாவுத் - 2834, திர்மிதி - 1516)

# அகீகாவாக மாடு , ஒட்டகம் கொடுக்கலாமா?

அகீகா கொடுக்கும் போது ஆடு தவிர்ந்த ஏனைய கால்நடைகளை[1] அகீகாவாக கொடுக்கலாமா? என்பதில் இரண்டு கருத்துக்கள் உள்ளன.



## முதலாவது கருத்து

மாடு, ஒட்டகம் ஆகியவற்றை அகீகாவாக கொடுக்கலாம். ஆனால் ஆண் குழந்தை எனின் அதற்கேற்ப பூரணமாக, சரி நிகராக கொடுக்கப்பட வேண்டும்.[2]

(உதாரணமாக ஒருவருக்கு ஆண் குழந்தை பிறந்தால் மாடு கொடுக்க வேண்டிய நிலை ஏற்படின் அவர் 02 மாடுகள் கொடுக்க வேண்டும்). இதற்கு ஆதாரமாக பின்வரும் செய்தியை குறிப்பிடுகின்றனர்.

1. கால்நடை என்பதில் ஆடு, மாடு, ஒட்டகம் ஆகியன மாத்திரமே இடம்பெறும். கோழி போன்ற பறவை இனங்களை அகீகாவாக கொடுக்க முடியாது என்பதில் அறிஞர்கள் ஒருமித்த கருத்தில் உள்ளனர்.

2. அல்காபீ பீ பிக்ஹில் இமாம் அஹ்மத் - 1/546

நபியவர்கள் கூறியதாக அனஸ் ரழி அவர்கள் அறிவிக்கிறார்கள் **"யாருக்கும் குழந்தை பிறந்தால் அவர் ஒட்கத்தையோ அல்லது மாட்டையோ அல்லது ஆட்டையோ அகீகாவாக கொடுக்கட்டும்".**[1]



## இரண்டாவது கருத்து

அகீகாவாக ஒருவர் ஆடு தான் கொடுக்க வேண்டும். ஏனனில் அகீகா தொடர்பாக இடம்பெற்றுள்ள அனைத்து செய்திகளிலும் ஆடு தான் கொடுக்கப்பட்டுள்ளது என குறிப்பிடப்பட்டுள்ளது. அது அல்லாமல் மாடு, ஒட்டகம் என்பவற்றை குறிப்பிட்டு அனஸ் ரழி அறிவிக்கும் மேலுள்ள பலவீனமான ஹதீஸை தவிர எந்த செய்திகளும் இடம்பெறவில்லை.

ஒரு வணக்க வழிபாடு குர்ஆன், சுன்னா அடிப்படையில் வழிகாட்டப்பட்ட ஒன்றாக இருக்க வேண்டும். அந்த வழிகாட்டல் நபியவர்கள் காலத்தில் மாடு, ஒட்டகம் இருந்த போதிலும் ஆடு தான் கொடுக்க வேண்டும் என்றே அறிவிக்கப்பட்டுள்ளமையால் ஆட்டை மாத்திரம் கொடுப்பதே நபி வழியாகும்.

> **"சுன்னாவின் வழிகாட்டலின் பிரகாரம் அகீகா கொடுப்பதற்கு ஆடு தான் என குறிப்பிடப்பட்டு வந்துள்ளதால் அதனை கொடுப்பதே ஏற்றமான கருத்தாகும்."**

---

1. தபராணி - 229 (இந்த ஹதீஸ் மிகவும் பலவீனமான செய்தியாகும். இன்னும் சில அறிஞர்கள் இது இட்டுக்கட்டப்பட்ட செய்தி எனவும் கூறுகின்றனர்.)

## கடன் பெற்று அகீகா கொடுத்தல்

குழந்தையின் தந்தை ஏழையாக இருக்கின்ற போது அவர் கடன் வாங்கி அகீகா கொடுப்பதில் பிரச்சினையில்லை. ஆனால் வாங்கிய கடனை திருப்பிச் செலுத்தும் நிலையில் தந்தை இருக்க வேண்டும். அகீகாவிற்காக வாங்கிய கடனை திருப்பிச் செலுத்த முடியாத நிலையில் உள்ளவராக இருப்பின் அவர் அகீகா கொடுக்காமல் இருப்பதே ஏற்றமானதாகும்.

இமாம் அஹ்மத் இப்னு ஹன்பல் (ரஹ்) அவர்கள் கூறினார்கள் **"ஒருவர் கடன் பெற்றால் அல்லாஹ் அதனை மீள செலுத்துவதற்கான வழிகளை ஏற்படுத்திக் கொடுக்கட்டும் என நான் ஆசைவைக்கிறேன். ஏனனில் அவர் நபியவர்களின் சுன்னாவில் ஒன்றை உயிர்ப்பித்து நபியர்கள் கொண்டு வந்ததை நடைமுறைப்படுத்தினார் என்பதற்காக (கடனை மீள செலுத்த) ஆதரவு வைக்கிறேன்.**[1]

நிரந்தர வருமானம் பெறும் ஒருவரே கடன் பெற்று அகீகாவை நிறைவேற்றலாம். ஆனால் நிரந்த வருமானமற்றவர் அகீகா கொடுக்க கடன் பெறுவது அவசியமில்லை.[2]

1. ஸாதுல் மஆத் - 2/285)

2. (இதே கருத்தை இப்னு தைமிய்யா ரஹ் அவர்களும் கூறியுள்ளார்கள்)

# அகீகா கொடுப்பதற்கு மிகவும் சிறந்தது ஆண் ஆடா? அல்லது பெண் ஆடா?

அகீகா கொடுக்கும் போது ஆண் ஆடோ அல்லது பெண் ஆடோ எதனையும் கொடுக்கலாம். என்றாலும் ஆண் ஆட்டை கொடுப்பது மிகச் சிறந்ததாகும்.

நபியவர்கள் ஹஸன் ரழி அவர்களுக்கு இரண்டு செம்மறி ஆடுகளும், ஹுஸைன் ரழி அவர்களுக்கு இரண்டு செம்மறி ஆடுகளும் அகீகாவாக கொடுத்தார்கள். அதே போல இரண்டு கொம்புடைய செம்மறியாட்டை உழ்ஹியாவாக கொடுத்தார்கள்.



## ஆண் குழந்தைக்காக அறுக்கப்படும் இரண்டு ஆட்டை (தனித்தனியாக) வெவ்வேறு சந்தர்ப்பங்களில் கொடுக்கலாமா?

ஆண் குழந்தைகளுக்கான இரண்டு ஆட்டையும் ஒரே நேரத்தில் அறுப்பது தான் மிகச் சிறந்ததாகும். ஏனனில் ஹதீஸ்களில் அப்படித்தான் வெளிப்படையாக குறிப்பிடப்பட்டுள்ளது. அதே போல அந்த இரண்டு ஆட்டையும் ஒரே நிறையுடயதாகவும், வயதுடையதாகவும் சமானதாக பெறக் கூடியதாக இருப்பின் இன்னும் சிறந்ததாகும்.

இப்போது ஒருவர் இரண்டு ஆட்டை அறுக்கும் போது ஒன்றை இப்போதும், மற்றையதை வேறு ஒரு நேரத்திலும் அறுக்க நினைக்கிறார். அல்லது அல்லது ஒன்றை அவரது இடத்திலும் மற்றையதை வேறு இடத்திலும் அறுத்துக் கொடுக்க விரும்புகிறார் எனில் அதனை பிரித்து வெவ்வேறு நேரங்களில் கொடுப்பதில் பிரச்சினையில்லை. அதற்கு எந்த தடையும் நபிவழியில் இடம்பெறவில்லை.

# அகீகா ஆட்டின் எலும்பை உடைத்தல்



அகீகா கொடுக்கும் ஆட்டின் எலும்பை உடைப்பது தொடர்பில் பல சந்தேகங்களும், சில புரிதல்களும் நமக்கிடையில் வியாபித்துள்ளது. பொதுவாகவே ஒரு பிராணியை அறுக்கின்ற போது அதன் எலும்புகளில் உள்ள இறைச்சியை பிரித்தெடுப்பதோடு சூப் போன்ற உணவுகளை தயாரிப்பதாயின் எலும்புகள் கொத்தப்படுவது வழமையாகும். ஆனாலும் குழந்தைக்காக அகீகா அறுக்கப்படுவதால் அதன் எலும்பை உடைப்பதா என்பது தான் இந்த தயக்கத்திற்கான காரணியாகும். அதற்கு துணையாக பின்வரும் செய்தியும் நோக்கப்படுகிறன்றது.

ஹசன் ஹுஸைன் ஆகிய இருவருக்காக ஃபாத்திமா (ரலி) அவர்கள் அகீகா கொடுத்த போது நீங்களும் (இதிலிருந்து) உண்ணுங்கள். (பிறருக்கும்) உண்ணக்கொடுங்கள். இதன் எலும்பை உடைத்துவிடாதீர்கள் என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.[1]

---

1. (பைஹகி - 9/302), (கிதாபுல் மராஸீல் - அபூதாவுத் ரஹ்) (இமாம் அபூதாவூத் அவர்கள் எழுதிய கிதாபுல் மராஸீல் என்ற நூலில் பதிவு செய்யப்பட்டுள்ள இந்தச் செய்தியை ஹுஸைன் பின் ஸைத் அல்அலவி என்பவர் அறிவிக்கிறார். இவர் பலவீனமானவராவர். அதனால் அதனை ஏற்க முடியாது. (பார்க்க - துஹ்பதுல் முஹ்தாஜ் இலா அதில்லதில் மின்ஹாஜ் - 2/539

ஆயிஷா ரழி அவர்கள் அறிவிக்கும் செய்தியில் குழந்தையின் நலவுக்காக வேண்டி நன்நோக்கோடு அகீகா ஆட்டில் எழும்புகளை கொத்தாமல் அதன் மூட்டுக்களை கழட்டி எடுக்கும் படி கூறப்பட்டுள்ளது.

அதாவது ஆட்டை அறுப்பவர்களிடம் நன்நோக்கத்தில் ஆட்டில் எலும்புகளை கொத்தாமல் மூட்டுக்களாக கழட்டும் படி நாம் வேண்டிக் கொள்ளலாம். என்றாலும் எலும்பை கொத்தி எடுப்பில் எந்தப் பிரச்சினையும் இல்லை.

ஷேஹ் பின் பாஸ் ரஹ், உதைமீன் ரஹ் பின்வருமாறு கூறுகின்றனர். "ஆட்டின் எலும்பை உடைப்பது அவரவர் விருப்பத்தில் உள்ளதாகும். அதை உடைப்பதிலும், உடைக்காமல் இருப்பதிலும் பிரச்சினையில்லை. ஆனால் எலும்பை உடைப்பதால் அவருக்கு எவ்வித குற்றமும் ஏற்படாது.[1]

1. பதாவா நூருன் அலத் தர்ப் - 307

## அகீகா இறைச்சியை விநியோகித்தல்

உழ்ஹிய்யா இறைச்சியை நாமும் சாப்பிடுவதுதோடு ஏனையவர்களுக்கும் வழங்குகிறோம். அதே போல நமது குழந்தைகளுக்காக அறுக்கப்பட்ட இறைச்சியை பெற்றோர்களும் உண்ணுவதோடு ஏனையவர்களுக்கும் வழங்லாம்.

அகீகா இறைச்சியை அதனை வழங்குபவர் தான் விரும்பும் அனைத்து விதத்தில் வழங்கலாம். அவர் அனைத்தையும் சாப்பிட விரும்பினால் சாப்பிடலாம். அல்லது அனைத்தையும் தர்மம் கூட செய்யலாம். அதே போல அவர்களும் சாப்பிடுவதோடு, அவற்றில் சிலவற்றை தர்மம் செய்யலாம். தான் விரும்புவர்களை அழைத்து அந்த இறைச்சியில் விருந்தும் கொடுக்கலாம். இதையே ஷேஹ் இப்னு பாஸ் அவர்களும் தெரிவு செய்கிறார்கள். ஆனால் அகீகாவிற்காக அறுக்கப்பட்ட இறைச்சியை விற்பனை செய்ய முடியாது.

**அகீகாவிற்காக அறுக்கப்பட்ட இறைச்சியை விற்பனை செய்ய முடியாது.**

இப்னு ஸீரீன் ரஹ் கூறுகின்றார்கள் "நீங்கள் விரும்பும் விதத்தில் அதன் சிறைச்சியை பயன்படுத்துங்கள்." அஹ்மத் ரஹ் அவர்களிடம் கேட்கப்பட்ட போது இப்னு ஸீரீன் ரஹ் அவர்களின் கூற்றையே சரிகண்டதாக இப்னு குதாமா ரஹ் அவர்கள் கூறுகின்றார்கள்.



# தனக்கு தானே அகீகா கொடுத்தல்

ஒரு மனிதனுக்கு அவருடைய தந்தை அகீகா கொடுக்கவில்லை எனின் அவர் வளர்ந்தவரான பின்பு தனக்காக அவர் நிறைவேற்றலாமா? என்பது தொடர்பில் அதிகமானவர்களுக்கு சந்தேகங்கள் நிலவுகின்றன. இந்த விடயத்தில் அறிஞர்கள் மத்தியில் இரண்டு விதமான கருத்து வேறுபாடுகள் காணப்படுகின்றன.

## முதலாவது கருத்து

அவர் தனக்காக அகீகா கொடுக்க முடியாது. இது ஹம்பலி மத்ஹபின் சட்டமாகும். இமாம் அஹ்மத் ரஹ் அவர்களிடம் இது தொடர்பில் கேட்கப்பட்ட போது **"அது தந்தை மீது (கடமையாகும்) உள்ளதாகும்"** என கூறினார்கள். எனனில் வேறு ஒருவரே அதனை கொடுக்க கடமையானவர் (தகுதியானவர்) என்பதே நபிவழியாகும்.

## இரண்டாவது கருத்து

ஒருவர் தனக்காக அகீகா கொடுக்கப்படாமல் விடுபட்டிருக்கும் போது அவர் தனக்காக வேண்டி அகீகா கொடுக்கலாம். என அதா ரஹ், அல்ஹஸன் ரஹ் ஆகியோர் கூறுகின்றனர்.

அதற்கு பின்வரும் செய்தியை ஆதாரமாக முன்வைக்கின்றனர். நபியவர்கள் கூறினார்கள் ' **ஒவ்வொரு குழந்தையும் அதற்கான அகீகாவுடன் அடமானம் வைக்கப்பட்டுள்ளது'.** அதாவது அந்த அடகிலிருந்து அவரை அவர் விடுதலை செய்யப்படுவது மார்க்கமாகும்.

இதில் முதலாவது கருத்தே ஏற்றமானதாகும். ஏனனில் அது தந்தைக்கே மார்க்கமாக்கப்பட்டுள்ளது. அதனை அவரல்லாதவர் செய்ய முடியாது. அதே போல நபியர்கள் தமக்காக அகீகா கொடுத்தார்கள் என நபியவர்களை தொட்டும் எந்த செய்தியும் இடம்பெறவில்லை. அதே போல அபூபக்ர், உமர், உஸ்மான் ஆகிய ஸஹாபாக்கள் பெரிய வயதில் இஸ்லாத்தை ஏற்றுக் கொண்ட போதிலும் அவர்கள் தமக்காக அகீகா கொடுத்ததாக நாம் எங்கும் அறியவில்லை.

அப்படி அவர்கள் செய்திருந்தால் அது ஹதீஸ்களினூடாக அறியப்பட்டிருக்கும். (அப்படி ஹதீஸ்களில் வராத காரணத்தில்) இமாம் அஹ்மத் ரஹ் அவர்கள் கூறியது போன்று அது பெற்றோருக்கு உரித்தானதாகும். அவரே தனது குழந்தைக்காக அகீகா கொடுப்பார்.

அப்படி ஒரு தந்தை தனது மகனுக்கு அகீகா கொடுக்கவில்லை எனின் அப்போது அது நீங்கிவிடும். அதற்காக குழந்தை பெரிய வயதில் தனக்காக கொடுக்க வேண்டும் என மார்க்கம் வழிகாட்டவில்லை. அல்லாஹ்வே அறிந்தவன்.

## மரணித்த குழந்தைக்குரிய அகீகா

குழந்தை மரணித்தால் அதற்கு அகீகா கொடுக்க தேவையில்லை. ஏனனில் குழந்தையின் ஆரோக்கியம், நலவுக்காக அல்லாஹ்விற்கு நன்றி செலுத்தும் நோக்கிலேயே அகீகா கொடுக்கப்படுகின்றது. இப்போது குழந்தை மரணித்துள்ளபடியால் அதற்கு அகீகா கொடுக்க வேண்டிய கடமையில்லை.

பொதுவாகவே குழந்தைகளை பொறுத்தமட்டில் அதன் முதல் ஏழு நாட்கள் முக்கியமானதாகும். அந்த ஏழு நாட்களை குழந்தை கடந்து விட்டால் பெரும்பாலும் குழந்தை அதற்கு பின்னல் நலவுடனே இருக்கும். அதனால் தான் ஏழாம் நாளில் அகீகா கொடுக்க மார்க்கமாக்கப்பட்டுள்ளது. அதற்குள் குழந்தை மரணித்தால் அகீகா கொடுப்பது அவசியமில்லை.

ஆனாலும் அக்குழந்தைக்கு பெயர் சூட்ட வேண்டும். மறுமை நாளில் அந்த பெயரை கொண்டே அழைக்கப்படும்.



# அகீகாவையும் உழ்ஹிய்யாவையும் ஒன்றாக சேர்த்துக் கொடுத்தல்

ஒருவருக்கு குழந்தை பிறந்து ஏழாம் நாள் அன்று உழ்ஹிய்யா கொடுக்கும் நிலையும் ஏற்படுகின்றது எனின் குழந்தை பிறந்ததற்காக அகீகாவையும் அதே போல உழ்ஹிய்யாவையும் ஒன்றாக ஒரே நிய்யத்தில் நிறைவேற்றலாம். அதில் பிரச்சினையில்லை.

இமாம் அஹ்மத் ரஹ் அறிவிக்கும் செய்தியில் "உதாரணமாக ஒருவர் வெள்ளிக்கிழமை,(அன்றை தினம்) பெருநாளுக்கான குளிப்பு ஆகிய இரண்டிற்கும் ஒரு தடவை குளித்தால் அது இரண்டையம் நிறைவேற்றியதாக அமையும். அதே போல லுஹர் அதானுக்கு பின்னர் பள்ளியில் நுழைகின்ற போது தஹ்யதுல் மஸ்ஜித் தொழுகை, லுஹருடைய முன் சுன்னத் ஆகிய இரண்டிற்குமான நீய்யத்தோடு தொழுதால் அது இரண்டிற்குமுரிய கூலி கிடைக்கும். அதே போன்றே அகீகா, உழ்ஹிய்யாவடைய நாள் ஒரே தினமாக இருப்பின் அதை நிறைவேற்றுகின்ற போது இரண்டிற்குமுரிய கூலி கிடைக்கும்.[1]

1. இன்ஸாப் - 4/111

இன்னும் சில அறிஞர்கள். "அதற்கு அவ்வாறு கூலி வழங்கப்படாது. ஏனனில் அகீகா என்பது வேறு. உழ்ஹிய்யா என்பது வேறு. மற்றையதன் கூலி இன்னொன்றுக்கு வழங்கப்படமாட்டாது. என கூறுகின்றனர்.

என்றாலும் இமாம் அஹ்மத் ரஹ் கூற்றே மிகவும் சரியான நபிவழிக்கு நெருக்கமானதாகும்.. அதே போல மனிதர்களிடம் வாய்ப்பு, வசதி இருக்குமேயானால் அகீகாவையும், உழ்ஹியாவையும் தனித்தனியே கொடுப்பது தான் மிகவும் சிறந்தது.



# 7ம் நாள் அகீகா கொடுப்பதில் உள்ள பலன்

ஒரு குழந்தை பிறந்து அந்த வார காலத்திற்குள் கஷ்டத்திற்கும், அமைதிக்கும் மத்தியில் தடுமாற்றமுள்ளதாக நாட்களை கடத்துகின்றது. அப்படியான குழந்தை பெரும்பாலும் ஏழாம் நாளிலேயே உயிர் வாழுமா? அல்லது மரணிக்குமா? என்பது தீர்மானிக்கப்படும். அதற்காக வேண்டி குழந்தையின் நலவுக்காகவும், ஆரோக்கியத்திற்காகவும் அகீகா கொடுக்கப்படுகின்றது.

இப்னு கையூம் (ரஹ்) அவர்கள் கூறினார்கள் "அல்லாஹ் தன் அடியார்களின் நிலைகளை ஒவ்வொரு ஏழு நாட்களும் மாற்றுவதன் மூலமாக தனது ஹிக்மத்தை வெளிப்படுத்துகிறான். அந்த ஏழு நாட்களுக்குள் கட்டம் கட்டமாக படித்தரம், படித்தரமாக ஒரு நிலையில் இருந்து இன்னொரு நிலைக்கு நகர்த்துகிறான். அதன் காரணமாக தான் ஒரு நோயாளி ஏழு நாட்களுக்குப் பின்னர் நோயிலிருந்து நீங்கி சக்தி பெறுகிறானா அல்லது அவனது நிலை மோசமடைகின்றதா என்பதை அறிந்து கொள்வாய். இதனால் ஒவ்வொரு அடியானும் ஏழு நாட்களில் ஒரு நாள் அல்லாஹ்விடம் மன்றாடி, சிரம் பணிந்து அவனிடம் பிரார்த்திப்பது அவனுக்கு வரும் கெடுதி, தீங்கு, என்பன நீங்கி வாழ்கை சரியாக அமைய காரணமாக அமைகின்றது. மனிதனின் சிந்தகைளை விட மார்க்கத்தை உருவாக்கி எம்மைப் படைத்தவன் ஞானமிக்க அல்லாஹ் தூய்மையானவன். அல்லாஹ்வே மிக அறிந்தவன்.[1]

1. துஹ்பதுல் மவ்தூத் 1/96



## குழந்தைக்கு பெயர் சூட்டுதல்

அகீகா கொடுப்பது எப்படி அவசியமோ அதே போன்றே குழந்தைகளுக்கு பெயர் சூட்டுவதும் அவசியமாகும். குழந்தைகளுக்கு பெயர் சூட்ட நாடும் பெற்றோர் மிக அழகான, மார்க்கம் அனுமதித்த வரையறைக்குள் நின்றும் பெயர்களை சூட்ட வேண்டும். இழிவான கருத்துக்கள், மார்க்கம் தடுத்துள்ள பெயர்களை சூட்டக் கூடாது.[1]

அவ்வாறே குழந்தை பிறந்து ஏழாம் நாள் அன்று பெயர் சூட்ட வேண்டும். நபியவர்கள் கூறினார்கள். "ஒவ்வொரு குழந்தையும் அதற்கான அகீகாவுடன் அடமானம் வைக்கப்பட்டுள்ளது. ஏழாம் நாள் குழந்தைக்காக அகீகா கொடுத்து முடிகளை களைந்து பெயர்

1. உதாரணமாக (அஹான் - இழிவானவன்), (இலாஹி - கடவுள்)

சூட்டப்படும்". அதே போன்று ஏழாம் நாளுக்கு முன்னர் பெயர் சூட்டுவதில் பிரச்சினையில்லை. அல்லாஹ் இம்ரானுடைய மகள் தொடர்பாக கூறும் போது

وَإِنِّي سَمَّيْتُهَا مَرْيَمَ - آل عمران : 36

"அவளுக்கு மர்யம் என்று பெயரிட்டுள்ளேன்.[1] அது அவர் பிறந்த பின்னர் (பெயர்) சூட்டப்பட்டது.

நபியவர்கள் கூறினார்கள் "ஓர் இரவு எனக்கு ஆண் குழந்தை பிறந்தது. அதற்கு இப்றாஹீம் என எனது தந்தையின் பெயரை சூட்டினேன்.[2]

அனஸ் ரழி அவர்கள் அறிவிக்கிறார்கள் "அபூதல்ஹா ரழி அவர்களுக்கு குழந்தை பிறந்து அதை நபியவர்களிடம் (கொண்டு) சென்ற போது அக்குழந்தைக்கு அப்துல்லாஹ் என பெயர் சூட்டினார்கள்.[3]

மேலுள்ள செய்திகள் ஒருவர் ஏழாம் நாளிற்கு முன்னர் குழந்தைக்கு பெயர் வைக்க அனுமதியளித்திருப்பதை அறியலாம். எனவே ஏழாம் நாளிற்கு முன்னர் பெயர் வைப்பதில் பிரச்சினையில்லை அதனால் தான் புஹாரியில்"குழந்தை பிறந்ததும் பெயர் சூட்டுதல்" என்ற தலைப்பிடப்பட்ட பாடமுள்ளதாகும்.[4]

---

1. ஆல இம்ரான் - 36
2. முஸ்லிம் - 1807
3. புஹாரி - 5470, முஸ்லிம் - 2144
4. புஹாரி - 5467

இப்னுல் கையூம் ரஹ் கூறுகிறார்கள். “பெயர் சூட்டுவது உண்மையில் ஒன்றை அதன் பெயரை கொண்டு அறிவதற்காகும். யெர் சூட்டப்படாத ஒன்றை நாம் பெறுகின்ற போது அதனை அறிந்து கொள்ள முடியாமல் போகும். குழந்தை பிறந்த தினத்தில் பெயரை வைப்பது கூடுமானது. அதே போல மூன்றாவது நாளில் வைப்பதோ அல்லது ஏழாம் நாளில் வைப்பதுதோ கூடுமானது. அல்லது அகீகா அறுக்கப்படும் நாளில் பெயர் சூட்டுவதும் ஆகுமானது. அதற்கு முன்னரோ அல்லது பின்னரோ சூட்டினாலும் ஆகுமானது.[1]

## குழந்தைக்கு பெயர் சூட்டுவது தந்தையின் உரிமையா? அல்லது தாயின் உரிமையா?

பெயர் சூட்டுவது வாஜிபாகும். பெயர் சூட்டாமல் விடுவது கூடாது. பெயர் சூட்டுவதில் தாய் தந்தைக்கிடையில் முரண்பாடு இருந்தால் தந்தையே பெயர் சூட்ட தகுதியானவராவார்.[2]

1. துஹ்பதுல் மவ்தூத் - பக்கம் 1111
2. துஹ்பதுல் மவ்தூத் - பக்கம் 135



# பிறந்த குழந்தையின் முடியை நீக்குதல்

ஏழாம் நாள் குழந்தையில் முடியை நீக்குவது சுன்னத்தாகும். குழந்தையின் முடியை முழுவதுமாக இதன் போது நீக்க வேண்டும். நபியவர்கள் கூறினார்கள் "ஒவ்வொரு குழந்தையும் அதற்கான அகீகாவுடன் அடமானம் வைக்கப்பட்டுள்ளது. ஏழாம் நாள் குழந்தைக்காக அகீகா கொடுத்து முடிகளை களைந்து பெயர் சூட்டப்படும்."

இங்கு நாம் ஓர் விடயத்தை அறிந்து கொள்ள வேண்டும். ஆண் குழந்தைகளுக்கு முடிகளை களைவதில் எந்த கருத்து முரண்பாடும் கிடையாது. ஆனால் பெண் குழந்தைகளுக்கு முடிகளை களைவதில் சில கருத்துக்கள் நிலவுகின்றன.

ஹனபி, மாலிகி, ஷாபிஈ மத்ஹப் பிரகாரம் ஆண் குழந்தையின் முடியை போல பெண் குழந்தையின் முடியையும் முழுவதுமாக நீக்க வெண்டும். என கூறுகின்றனர். அதற்கு பின்வரும்

ஹதீஸை ஆதாரமாக முன்வைக்கின்றனர்.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், “குழந்தை (பிறந்த) உடன் ‘அகீகா’ கொடுத்து. அவனுக்காக ‘அகீகா கொடுங்கள். அவன் (தலைமுடி களைந்து) பாரத்தை இறக்கிடுங்கள்” என்று சொல்ல நான் கேட்டிருக்கிறேன். என சல்மான் பின் ஆமிர் அள்ளப்பீ (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.[1]

மேலுள்ள செய்தியில் இடம் பெற்றுள்ள குழந்தை என்பது ஆண் குழந்தைக்குரிய செய்தியாகும்.

ஹன்பலி மத்ஹபின் பிரகாரம் பெண் குழந்தைகளுக்கு முடிகளை களைவது அவசியமில்லை. அதற்கு ஆதாரமாக பின்வரும் செய்தியை கூறுகின்றனர்.

பெண்களுக்கு முடிகளை களைதல் இல்லை. அவர்களுக்கு குறைத்தலே உண்டு. [2] எனவே இச் செய்தியை அடிப்படையாக வைத்து பெண் குழந்தைகளுக்கு முடிகளை களைவது கூடாது. என கூறுகின்றனர்.

இதில் இரண்டாவது கருத்தே சரியானதாகும். உண்மையில் பெண் குழந்தைகளின் முடிகளை பொறுத்தவரை அது அவர்களின் அழகுகோடு தொடர்பான ஒன்றாகும். நோயின் காரகமாக வைத்தியர்கள் வேண்டிக் கொண்டால் பெண் குழந்தைகளின்

1. புஹாரி - 5472

2. அபூதாவுத் - 1984

முடிகளை களைவதில் பிரச்சனையில்லை. ஹஜ், உம்ரா போன்ற வணக்கங்களின் பின்னர் கூட அவர்களின் முடியை குறை வேண்டுமே தவிர முழுவதுமாக களையக் கூடாது.[1]

## முடியின் நிறைக்கேற்ப வெள்ளியை தர்மமாக கொடுத்தல்

பிறந்த குழந்தையின் முடியை களைந்து அதன் நிறைக்கு நிகரான வெள்ளியை தர்மம் செய்வது நபிவழி என்று சிலர் எண்ணுவதோடு அவ்வாறு வழங்குவதையும் அவதானிக்கலாம். இதற்கு சில ஹதீஸ்களையும் ஆதாரமாகக் காட்டுகிறார்கள். ஆனால் அவை அனைத்தும் பலவீனமான செய்தியாகும்.

அலி ரழி அவர்கள் அறிவிக்கின்றார்கள்“நபி (ஸல்) அவர்கள் ஹசன் (ரலி) அவர்களுக்கு ஒரு ஆட்டை அகீகாவாக கொடுத்தார்கள். (தனது மகள் ஃபாத்திமா (ரலி) அவர்களை நோக்கி) பாத்திமாவே அவருடைய (ஹசன்) தலையை மழித்து அவரது முடியின் எடைக்கு நிகராக வெள்ளியை தர்மம் செய்வீராக என்று கூறினார்கள். எனவே நான் அதை நிறுத்துப்பார்த்தேன். அதனுடைய எடை ஒரு திர்ஹம் அல்லது சில திர்ஹம்களின் எடையாக இருந்தது.2 எனவே வெள்ளி கொடுப்பது கூடாது என்பதை புரிந்து கொள்ள வேண்டும்.

---

1. நூறுன் அலத் தர்ப் - பின்பாஸ் (ரஹ்)

2. திர்மிதி (1439) இது பலவீனமான செய்தியாகும். ஏனனில் இமாம் திர்மிதி இந்த ஹதீஸின் அறிவிப்பாளர் தொடர் அறுந்துள்ளது இதனுடைய அறிவிப்பாளர்களில் ஒருவரான முஹம்மத் பின் அலீ என்பவர் அலீ (ரலி) அவர்களை சந்திக்கவில்லை. என கூறியுள்ளார்கள்.



# குழந்தையின் காதில் அதான் இகாமத் சொல்லுதல்

குழந்தை பிறந்தவுடன் அவர்களின் வலது காதில் பாங்கும், இடது காதில் இகாமத் கூறும் பழக்கம் நமக்கிடையே பரவலாக காணப்படுகின்றது.

அது தொடர்பாக அபூ ராபிஃ ரழி அவர்கள் அறிவிக்கும் செய்தியில் "நபியவர்கள் ஹஸன் இப்னு அலி அவர்களை பாத்திமா அவர்கள் பெற்றெடுத்த போது ஹஸன் அவர்களது காதில் அதான் கூறியதை நான் பார்த்தேன்." என கூறினார்கள்.[1]

1. திர்மிதியில் பதிவு செய்யப்பட்டுள்ள இச் செய்தியின் அறிவிப்பாளர் வரிசையில் சில கூற்றுக்கள் நிலவுகின்றன. என்றாலும் ஒன்றோடு ஒன்றோடு பலமான வரிசையை கொண்டுள்ளது. அது ஹஸன் லிஃரிஹி என்ற தரத்திற்கு உயர்த்தப்பட்டுள்ளது.

ஷேஹ் அப்துல் அஸீஸ் இப்னு பாஸ் ரஹ் அவர்கள் கூறுகின்றார்கள் "இமாம் திர்மிதி அவர்கள் அந்த செய்தியை "ஹஸன் ஸஹீஹ்" என கூறினார்கள். அதுவே மிகவும் நெருக்கமானதாகும். என்றாலும் குழந்தையின் வலது காதில் அதான் கூறுவது ஆகுமானதாகும். அல்லாஹ் அறிந்தவன்.

அதே போல இகாமத் கூறுவது தொடராக எந்த விதமான ஆதாரபூர்வமான செய்திகளும் இடம்பெறவில்லை. என்றாலும் இடது காதில் இகாமத் கூறுவதில் எந்த பிரச்சினையும் இல்லை. அது காலா காலமாக வாழையடி வாழையாக முற்பட்ட காலத்தில் இருந்தே முஸ்லிம்களின் ஒரு செயற்பாடாக இருந்து வந்துள்ளது. இன்னும் இது முஸ்லிம்கள் மத்தியில் மிகவும் பிரசித்தி பெற்ற அம்சமாகும்.

எனவே மேலுள்ள விடயங்கள் எமது குழந்தை பிறந்தது முதல் நாம் அவர்களுக்கு செய்ய வேண்டிய கடமைகளுள் உள்ளதாகும். அவற்றை பொடுபோக்காக விட்டுவிடாமல் குழந்தையின் நன்மை கருதி நிறைவேற்ற வேண்டும். அவற்றுள் மார்க்க வரையறைகளை முழுவதுமாக நடைமுறைப்படுத்தி நபியவர்கள் வழிகாட்டிய பிரகாரம் அகீகாவையும் நிறைவேற்ற முயல்வோமாக!

அல்லாஹ் மிக அறிந்தவன்